[8th March 1958

SRI M. KARUNANITHI : தேசிய அபிவிருத்தித் திட்டக் குழுக்க ளுக்கு பெரும்பாலும் காங்கிரஸ்காரர்கள் தான் நியமிக்கப்படுவது அமைச் சருக்குத் தெரியுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : காங்கிரஸ்காரர்கள் என்றால் விலக்கப்படக்கூடியவர்கள் அல்ல, யார் அக்கரை எடுத்துக் கொள்கிறார் களோ, அவர்கள் நியமிக்கப்படுவார்கள்.

SRI V. K. KOTHANDARAMAN : தேசிய அபிவிருத்தித் திட்டம், சமு தாய அபிவிருத்தித் திட்டம் இவைகள் நிறைவேறுவதில் யாவருக்கும் விருப்பம் உண்டு. இப்போது சர்க்கார் எல்லோரும் ஒத்துழைக்கவேண்டு மென்று சொல்கிறார்கள். இந்தக் கமிட்டிகளில் சர்வ கட்சிகள் சார்பிலே, ஒவ்வொரு கட்சியிலிருந்தும் பிரதிநிதிகளைச் சேர்த்து அந்த மாதிரி நல்ல முறையில் நிறைவேற்ற முடியும். அதைப் போன்று சர்க்கார் செய்ய முடியுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : It seems to be matter for argument and not a question at all.

SRI A. GOVINDASAMY : சர்க்கார், அதிலும் குறிப்பாக நமது நிதி அமைச்சர் அவர்கள் ஒவ்வொரு காரியத்திலும் ஒத்துழைப்பைக் கேட்கிறார் கள். இது விஷயத்திலாவது இனிமேல் ஏற்படுத்தும் கமிட்டியில் எதிர்க் கட்சியைக் கலந்து கொண்டு திறமையாக வேலை செய்வதற்கு சர்க்கார் ஏற்பாடு செய்வார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் அங்கத்தினர் கோவிந்த சாமி அவர்களும் இந்தக் கமிட்டியில் இருக்கிறார். அதனால் கட்சி அடிப் படையில் போட்டிருந்தால் கனம் அங்கத்தினர் இடம் பெற்றிருக்க முடி யுமா ? அவர்கள் இருப்பதாலேயே கட்சி அடிப்படையில் போடுவதில்லை என்று உணர்ந்து கொள்வார்கள் என்று நினைக்கிறேன்.

SRI K. SWAMINATHA MERKONDER : தேசிய விஸ்தரிப்புத்திட்டத் தில் தற்போது சட்ட சபையில் எதிர் கட்சிக்காரர்களுக்கு அதிக சலுகை கொடுப்பது போல் காங்கிரஸ்காரர்களுக்கும் தேசிய விஸ்தரிப்புத் திட்டத்தில அதிகமாகக் கொடுக்கப்படுமா என்று தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இதிலே யார் வேண்டுமானா லும் அக்கரை எடுத்துக் கொண்டு வேலை செய்தால் அவர்கள் கமிட்டியில் சேர்த்துக்கொள்ளப்படுவார்கள். வேலை செய்வதைப் பொறுத்த வரையில், கமிட்டியில் போட்டால் தான் வேலை செய்யவேண்டுமென்பதில்லை. அக் கரை எடுத்துக்கொண்டு வேலை செய்பவர்கள் எல்லோரும் நியமிக்கப் படுவார்கள் என்று சொல்லுகிறேன்.

MR. SPEAKER : அங்கத்தினர் சொல்லும்போது சட்ட சபையில் எதிர் கட்சிகளுக்குச் சலுகை கொடுப்பதாகச் சொன்னார்கள். அது நியாயமான முறைதான் என்று இந்த நேரத்தில் சொல்லுகிறேன்.

*Rural Dispensary at Valapady*

* 252 *Q.*—SRI M. P. SUBRAMANIAM : Will the Hon. the Minister for Revenue be pleased to state whether the Government have sanctioned any proposal to upgrade the Rural dispensary at Valapady into a Local Fund Dispensary?

THE HON. SRI M. A. MANICKAVELU : The Director of Medical Services has just received a petition to convert the existing Rural dispensary at Valapady into a regular dispensary. This matter is under his consideration.

SRI M. P. SUBRAMANIAM : ஸார், சேலம் வட்டத்தில் உள்ள இந்த கிராமம் ஏறக்குறைய 60,000, 70,000 ஜனத்தொகை கொண்டதாக இருப்பதாலும், சுற்றுவட்டாரத்தில் 15 மைல் அளவுக்கு பெரிய ஆஸ்

8th March 1958]

பத்திரிகள் இல்லாத காரணத்தினுலும், இரண்டு ஆண்டுகளுக்கு முன்பே சர்க்காரிடம் டி.எம்.ஒ. சிபாரிசு செய்திருப்பது அமைச்சர் அவர்களுக்குத் தெரியுமா ? அதிகக்காலம் கடத்தாமல், 30 மைல்களுக்கு இடையில் உள்ள இந்த ஆஸ்பத்திரியை லோகல் பண்டு ஆஸ்பத்திரியாக மாற்ற அமைச்சர் அவர்கள் உடனடியாக நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இதை இம்மாதிரி மாற்றவேண்டுமென்று டி.எம்.ஒ. சிபாரிசு செய்திருக்கிருர். இப்போது ஜில்லா போர்டை ஸ்பெஷல் ஆபீஸர் பார்த்து வருகிருர். அவரிடமிருந்து தகவலை எதிர் பார்க்கிறேம். வந்ததும் அதை அரசாங்கம் பரிசீலித்து, செலவு இனம் இதையெல்லாம் பரிசீலித்து ஆவன செய்யப்படும்.

*Government Transport Workers*

* 253 *Q.*—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Industries be pleased to state— 1-40 p.m.

(*a*) the various categories of workers in the Government Transport who are supplied with uniforms every year;

(*b*) how many sets are supplied to them for a year;

(*c*) whether any supply has been made for the year 1957-58; and

(*d*) if so, when?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) In the Madras Branch, all Drivers, Conductors, Checking Inspectors and Time-keepers of the Traffic Branch, all the staff below the rank of Foreman of the Technical Branch and Watchmen, Sweepers, Scavengers, Gardeners and Water Carriers are supplied with uniforms.

In the Kanyakumari Branch, all Transport Inspectors, Station Masters, Conductors and Drivers of the Traffic Branch and all the staff of the Technical Branch are supplied with Uniforms.

(*b*) Three sets per annum to the staff of the traffic branch and two sets per annum to the staff of the technical branch, Watchmen, Sweepers, Scavengers, Gardeners and Water Carriers in the Madras Branch are also supplied with two sets per annum.

(*c*) Yes, Sir.

(*d*) The supply for the year 1957-58 has been made on different dates. It has been completed in February 1958.

SRI T. S. RAMASWAMY PILLAI : இது துணியாகக் கொடுக்கப்படுகிறதா ? துணியாகவும் தையல் சார்ஜ் ஆகவும் கொடுக்கப்படுகிறதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : துணியாகவும், தையல் சார்ஜ் ஆகவும் கொடுக்கப்படுகிறது. தையல் சார்ஜ் கொடுத்தார்களா இல்லையா என்பதைச் சொல்லுவதற்கு இல்லை. ஆனல், தையல் சார்ஜ் எவ்வளவு என்று சொல்ல முடியும்.

SRI M. KALYANASUNDARAM : 1957-58-ம் வருஷத்திய உடை, இந்த வருஷக் கடைசியில் தான் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு வருஷமும் தேதி குறிப்பிட்டு, அந்தத் தேதிக்குள் கொடுக்க வேண்டுமென்ற அதிகாரத்தை டைரக்டர் அவர்களுக்குக் கொடுப்பார்களா ? அப்படிக் கொடுத்தால் காலதாமதமின்றிக் கிடைப்பது சாத்தியமல்லவா ?